வியாக்கிரபாத மகரிஷி அழைத்து மூலஸ்தானேசரை வணங்கச் செய்து தமது ஆசிரமஞ்சென்றனர், பிறகு ஹிரண்ணியவர்மனும் பட்டத்து யானையின்பேரிலேறி சங்கம், காளகம்முதலியவாத்தியங்கள் கோஷிக்கவும், நால்வகைச் சைனியங்கள் சூழ்ந்து வரவும், வந்திகள் ஸ்தோத்திரங்கள் செய்யவும், துவஜங்கள் ஆகாசத்தைமறைக்கவும், க்ஷேத்திரத்தைப் பிரதக்ஷிணம் வந்து தனது மாளிகையை அடைந்து பிதுர் பிதா மகாதிகள் அமர்ந்து அரசாண்ட சிம்மாசனத்தில் வீற்றிருந்தனன். பின்பு வீரர்களாகிய தனது சகோதரர்களை யழைத்து அரசசின்னங்கள்யாவும் கொடுத்துச் சுவர்ணகும்ப ஜலங்களால் ராஜ்ய பட்டாபிஷேகஞ்செய்து ஓ அநுஜர்களே! நீங்கள் சகல சைன்னியங்களோடும் நமது தேசஞ்சென்று முன்னோர்கள் எவ்விதம் ஆண்டார்களோ அவ்விதம் நீதிதவறாது அரசாண்டுவரக்கடவீர்களென்று ஆஞ்ஞாபித்தனர். அவர்களதை ஒப்புக்கொண்டு நடராஜபதியை வந்தித்துத் தமது தேசத்தை யடைந்தார்கள்.

பிறகு ஹிரண்ணியவர்மன் வியாக்கிரபாதரை நமஸ்கரித்து சுவாமி! இந்தத்திவ்விய சிதம்பர க்ஷேத்திரத் திருப்பணிசெய்யும் திருஸகஸிர முனிஸ்வரர்கட்கு திருமாளிகை யமைத்துவைக்கவும் அபேக்ஷிக்கின்றேன் அநுக்கிரகித்தல் வேண்டும் என்று பிரார்த்திக்க, அப்படியே செய்குகவென்று திருவாய்மலர்ந்தருளினர். உடனே அரசன் விசுவகர்மாவை யழைத்து இச்சிதம்பர க்ஷேத்திரத்தையும், திருஸகஸிர முனிவர்களின் மாளிகையையும் மனோக்கியமாக நிர்மாணஞ்செய்யவேண்டுமென்று ஆஞ்ஞாபித்தனன். உடனே விசுவகர்மாவும் அன்புடன் அங்கீகரித்து விசேஷ விஸ்தாரமான பஞ்சவர்ணங்களையும், உயர்ந்த தோரணங்களையும், உன்னத பிராகாரங்களையும், ஆகாயத்தைபளாவிய கோபுரங்களையும், அநேகமண்டபங்களையும், நவரத்தினமயமான தளவரிசைகளையும், ஆச்சர்யகரமான சித்திரப்படங்களையும், உத்துங்கமான துவஜங்களையும், சுவர்ணப்பட்டங்கள் கட்டிய அட்டாளமண்டபங்களையும், வச்சிரங்கள் பதித்து சுவர்ணசாந்துக்கள் பூசிய சுவர்ண சுவர்களையும், பவழங்களாலமைந்த உயர்ந்த கொடுங்கைகளையும், பிரகாசிக்கின்ற நீரோட்டமுள்ள வச்சிரஸ்தூபிகளையும், இந்திரநீல வேதிகளையும், மாணிக்கஸ்தம்பங்களையும், முத்துப்பந்தல்களையும், இந்திர நீலக்கற்களால் கட்டப்பட்ட பிராகாரங்களையும் நிர்மாணஞ் செய்தனன் இவ்விதம் நிர்மாணிக்கப்பட்ட சிதம்பரக்ஷேத்திரமானது ஏககாலத்தில் கோடி

சூரிய சந்திரர்கள் உதித்ததுபோலவும், இதுவரையில்காணப்படாத ஆச்சரியகரமாயும், வைகுண்ட சுவர்க்கங்களைப் பரிகசிப்பதாயும், நினைக்கவும் சொல்லவும் முடியாத விசித்திரங்களை யுடையதாயும் விளங்கின. அன்றியும் உப்பரிகைகளோடு கூடியதாய் சுவர்ண கலசங்கள் அமைந்ததாய் துவாரதோரணங்கள் உடையதாய் வீதிகளோடும் பிரகாரங்களோடும் விளங்குவதாய் உள்ள ஆசிரமங்களைத் திருஸகஸிர முனீசுவரர்களுக்கு அற்புதமாக விசுவகர்மாவைக் கொண்டு அமைத்தனன். பிறகு ஹிரண்ணியவர்ம சக்கிரவர்த்தி புண்ணியமான தினயில் ஸ்திரநக்ஷத்திரத்தில் வாஸ்துசாந்தி முதலியதுகள் நடத்தி விஸ்தாரமான ஆசிரமங்களில் திருஸகஸிர முனீசுவரர்களைக் கிருகப்பிரவேசஞ் செய்துவைத்தனன். பின்பு லோகானுக்கிரக காரணரான நடேசமூர்த்திக்குத் திருமஞ்சன முதலாகிய உத்ஸவக்கிரமத்தை வேதாகமப்பிரமாணஞ் செய்வதற்குப் பதஞ்சலி முனிவரால் ஏற்படுத்தி தேவோத்ஸவ விதாயகமான பூஜாஸூத்திரத்தை உத்தம லக்ஷணமமைந்த யானையின்பேரில் அலங்காரமாக வைத்து சகலவாத்தியங்களுடன் பட்டினப்பிரவேசஞ்செய்து சபா பிரவேசஞ்செய்து வைக்கத் திருஸகஸிர முனீசுவரர்கள் மிகுந்த சிரத்தையுடன் பூஜாஸூத்திரத்தைப் படித்து அதிற்சொல்லியபடி மாஹோத்ஸவங்களையும், ரிதுக்களில் செய்தற்குறிய உத்ஸவங்களையும் நக்ஷத்திரோற்ஸவங்களையும், நித்தியோத்ஸவங்களையும் உசிதமாய் நிச்சயித்து ஹிரண்ணியவர்மச் சக்கிரவர்த்திக்கு அறிவித்தனர்கள்.

அதைக்கேட்ட அரசனும் முனிவர்கள் சொல்லியபடி செய்வதென்று நிச்சயஞ்செய்தனன். பிறகு பார்த்திபவருடத்தில் ஆனி மாதத்தில் பூரநக்ஷத்திரத்தில் பகவானுக்கு ரதோத்ஸவஞ் செய்ய நிச்சயித்துத் திருஸகஸிர முனிவர்களைக்கொண்டு தேவர்களையழைத்தல், துவஜாரோகண முதலிய தேவயாகக் கிரியாயோக்கியமான இருபத்தேழுநாளைய மகோற்ஸவங்களையுஞ் சங்கர்ப்பிக்கச் செய்தனன். பிறகு தேவர்களும், தேவஸ்திரீகளும், ரிஷிகளும் மனிதர்களும், மகிபாலர்களும் உற்ஸவ தரிசனத்திற்காக வந்தனர்கள். அரசன் கோபுரங்களை விருஷபத் துவஜங்களால் அலங்கரித்து வீதிகள் தோறும் மகரதோரணங்கள்கட்டி சுவர்ணகும்பங்கள் வைத்து எங்கும் மகோற்ஸவம் வழங்கும்படிச் செய்தனன்.

இதைக்கண்ட அனேக ஜனங்கள் நிர்த்தனஞ்செய்தார்கள் பிறகு அரசன் நடராஜமூர்த்திக்கு ஒவ்வொருரத்தினங்களாற் செய்த பூஷணங்களையும், உற்ஸவயோக்கியமான உயர்ந்த சிங்காதனம், இரத்தின தண்டம், சுவேதசத்திரம், அநேக விருஷபத்துவஜங்கள் முதலிய உபகரணங்களையும் ஏற்படுத்தி மஹோத்ஸவம் நடந்துவருகையில், பகவான் பூரநக்ஷத்திரத்தில் வீதியில் எழுந்தருளும் ரதோற்சவ வைபவத்தைக்கண்டு தேவர்கள் ரிஷிகள் மனிதர்கள் முதலியவர்களெல்லாம் ஆனந்த விசேடத்தால் தன்யர்களாய் லயித்திருந்தனர்கள். பின்பு ஆடிமாசத்தில் முன்செய்த மகோற்சவத்தில் ஏற்றங் குறைவுகளிருப்பின் அதை பகவான் க்ஷமித்தல்வேண்டி தெப்போற்சவத்தையும், ஆவணிமாதத்தில் யாகதீக்ஷை செய்தவுடன் புஷ்பவிமானத்தில் வைத்துப் பவித்திரோத்ஸவத்தையும், பாத்திரபதோத்ஸவதையும், ஐப்பசி மாதத்தில் பூரநக்ஷத்திரத்தில் திருக்கலியாண மகோற்சவத்தையும், கார்த்திகை மாதத்தில் தீபோற்சவத்தையும், மார்கழி மாதத்தில் ஆருத்திரையோடு கூடிய சுபதினத்தில் அகஸ்தியர், புலஸ்தியர், விசுவாமித்திரர், பராசரர், வாமதேவர், வசிஷ்டர், ஜைமுனி, பாரத்துவாஜர், பிருகு, கண்ணுவர், காசிபர், மற்றுமுள்ள ரிஷிகளும் தில்லவனத்தை யடைந்து, திருஸகஸிர முனிசுவரர்களோடு கூடி சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து க்ஷேத்திரத்தை மூன்று பிரதக்ஷிணஞ்செய்து சபேசரை நமஸ்கரித்து பரமானந்த சாகரத்தில் மூழ்கியவர்களாய் கோலவுருவங்கொண்டு கோவிந்தனும், அம்ஸவடிவெடுத்து அயனும், அடிமுடி தேடியும் காணவொண்ணாத நடராஜ தெய்வமே! உம்மை நமஸ்கரிக்கின்றோம். விசுவரூபனே! காலவைரியே! சூலபாணியே! ஆக்கி அளித்துத்துடைக்கும் காரணமே! கருணைபுரிய வுருவாய்க்கொண்ட கற்பகமே உம்மை வந்திக்கின்றோமென்று பலவாறு ஸ்தோத்திரஞ்செய்து அஷ்டாங்கத்துடன் நமஸ்கரித்து அளவிறந்த மனோபீஷ்டங்களைப் பெற்று அவரவர்கள் சென்றார்கள். ஆதலால் ஒருவராலும் சொல்லி முடியாத அந்தப் புண்ணியதினத்தில் பகவானுக்கு மகோற்சவத்தைச் செய்யக்கடவை என்று வியாக்கிரபாதர் அரசனை நோக்கிக் கூறலும் அரசன் திருஸகஸிர முனிசுவரர்களுக்கு அறிவிக்க அவர்களும் மிகுந்த அன்புடன் புண்ணியதினங் கிடைத்தசென்று புண்ணிய தீர்த்தங்களைக்கொண்டு அமலராகிய நடேசருக்கு வேத மந்திரங்களால் அபிஷேக மகோற்சவத்தைச்செய்து கிருதமால புஷ்பங்களால் அலங்கரித்து நைவேத்திய முதலிய உபசாரங்கள்செய்து பதஞ்சலி வியாக்கிரபாதர் ஹிரண்ணியவர்மன் இவர்களுடன் தர்சித்தார்கள்.

இருபத்தைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

இருபத்தாறுவது அத்தியாயம்.

## ஹிரண்ணியவர்மன் நடேசமூர்த்திக்கு உற்சவாதிகள் நடத்தலைக் கூறியது.

---

கேட்டீர்களோ நைமிசாரண்ய வாசிகளான முனிவர்களே! புஷ்யமாத உற்சவ விதியை வியாக்கிரபாதர் ஹிரண்யவர்மனுக்குச் சொல்லியதை நாம் உங்கட்குச் சொல்லுகின்றோம். புஷ்யமாதத்தில் புஷ்யநக்ஷத்திரத்தோடு 'கூடிய தினத்தில் சுபலக்கினத்தில் எவர்கள் மகாநைவேத்தியஞ் செய்கிறார்களோ அவர்கள் சாசுவதமான மோக்ஷத்தைப் பெறுகிறார்கள் என்றுரைத்த வியாக்கிரபாதர்வசனத்தைக்கேட்ட அரசன், திருஸகஸிரமுனீசுவரர்களைக்கொண்டு அந்தபுஷ்ய நக்ஷத்திரத்தில் கைலாசபர்வதத்திற்கொப்பாகிய அன்னக்குவியலையும், பக்ஷிண போஜ்யங்களையும், லேகிய சோக்ஷியங்களையும், வெய்யலாலும் அக்கினியாலும் பக்குவமான போஜனவஸ்துக்களையும், அனேகவிதமான அப்பங்களையும், பருப்புக்களையும், மா, பெலா, வாழை முதலிய பலவர்க்கங்களையும், மகாநைவேத்தியமாக பகவானுக்கு அர்ப்பணஞ்செய்தனன். இதைக்கண்ட சகலமான முனிவர்களும் பூபதியினுடைய பக்தியைக் கொண்டாடினார்கள். வியாக்கிரபாதரும் சந்தோஷ சித்தராய் வேந்தனைப்பார்த்து நடேசமூர்த்தியின் உற்சவத்தின் இன்னுமொருவிசேடத்தைச் சொல்லுகிறேன். ஆனிமாதத்தில் பூரநக்ஷத்திர புண்ணியதினத்தில், தேவர்கள், முனிவர்கள், சித்தவித்தியாதரர்கள், யக்ஷராக்ஷஸர்கள், மனிதர்கள் முதலிய எல்லோருங்கூடி பக்தியுடன் தில்லவனத்தை யடைந்து சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து சிற்சபையையடைந்து, தேவதேவராயும், நிர்மலராயும், நிஷ்கிரியராயும், நித்தியராயும், நிஷ்களங்கராயும், மாயாதீதராயும், மகாதீதராயும், தரித்திருக்கும் சந்திரனால் திக்குகளைப் பிரகாசிக்கப் படுத்துகிறவராயும், நெற்றிக்கண்ணால் முப்புரத்தை எரித்தவராயும், கருணைக்கடலின் அலைகள் தவிழுங் கடாக்ஷ வீக்ஷண்யத்தை யுடையவராயும், புன்னகையால் மனோகரமாகிய முகசந்திர மண்டலத்தால் விளங்குகிறவராயும், நாகேந்திரங்களைக் குண்டலங்களாகத்தரித்தவராயும், வியாக்கிர சர்மதாரராயும், பார்வதி வல்லபராயும், நாகயஞ்ஞோப வீதராயும், அழகுபொருந்திய பாதச்சிலம்பின் ஒலியால் நிறைந்த திக்குகளை உடைத்தானவராயும், வலதுகாலால் அபஸ்மாரத்தை மிதித்து அனுக்கிரக ரூபமான வாமசர்ணத்தைத் தூக்கி நடித்தவராயும்

விளங்காநின்ற நடராஜமூர்த்தியைத் தரிசித்து ஆனந்தவெள்ளம் பெருகத்துதித்துப் பன்முறை வந்தித்துச் சரணாரவிந்தத்தைச் சிந்தித்து அவரவர்கள் வாசஸ்தலஞ் சென்றார்கள். ஆதலால் அப்புண்ணியதினம் வருகிற வருடத்தில் சமீபித்திருப்பதினால் உற்சவத்திற்குரிய பெரியரதம் முதலியவைகளைச் சீக்கிரமாய் அமைத்தல்வேண்டும், மனுகுலதிலகனே என்று வியாக்கிரபாதர் உரைத்தலும், அவ்வண்ணமே செய்வித்து மிதுனமாசம் வந்தவுடன் மிகுந்த அன்புடன் நடேசர் சந்நிதியில் கார்த்திகை நக்ஷத்திரத்தில் துவஜாரோகணஞ் செய்யவேண்டி தேவதாஹ்வானஞ்செய்து விருஷபம் எழுதிய துவஜப்படத்தைப் பட்டிணப்பிரவேசஞ் செய்வித்து ஆகம விதிப்படி துவஜாரோகணஞ் செய்தார்கள். மறுநாள் இரவில் மிருதங்கம், பேரி, துந்துபி முதலிய அநேக வாத்தியங்கள் கோஷிக்கவும், மறுதினத்தில் தேவர்கள் ரிஷிகள் முதலானவர்களும் தங்கள் தங்கள் பத்நிகளுடன் நடேசருடைய தரிசனத்திற்கு வந்தனர்கள். பூலோகத்தில் மத்தியார்ச்சுனம், மாயூரம், திருவெண்காடு' வேதாரண்ணியம், திருவாரூர், பஞ்சனதம், காஞ்சீபுரம், அருணாசல முதலிய உத்தம க்ஷேத்திரங்களால் விளங்கும் பரமசிவ கலாபேதமடைந்த சிவமூர்த்தங்களெல்லாஞ் சித்சபேசரின் தரிசனத்திற்கு வரவும், உற்சவத்திற்காக யாகதீக்ஷை முதலிய விதிகளைச்செய்து ஒன்பதாவது தினத்தில் பூரநக்ஷத்திரத்தில் நடேசமூர்த்தியை அதிவிசித்திரமான சுவர்ணமயரதத்தில் ஆரோகணஞ்செய்வித்து ஜனங்களால் பற்பலவிதமாக அலங்கரிக்கப்பட்ட வீதியில் அநேக வாத்தியங்கள் முழங்க, வேதங்கள் கோஷிக்க, பக்தர்கள் ஜயசப்தங்கள் கூற, தேவர்கள் களிக்க, முனிவர்கள் துதிக்க, பிரதக்ஷிணஞ் செய்வித்து சிற்சபாப்பிரவேசம் பண்ணுவித்தனன். இந்த உற்சவவைபவத்தைக்கண்டு களித்த வியாக்கிரபாதர் மன்னனை நோக்கி, ஹிரண்ணியவர்மனே! இதுவரையில் உற்சவம் பூர்த்தியாய்விட்டது. இனி யாவர்க்கும் ஸ்நானமாத்திரத்தில் முத்தியளிக்கும் தீர்த்தஸ்நான மகோற்சவத்தைச் செய்வித்தல்வேண்டுமென்றருளலும். ஓநாதனே எவ்விடத்தில் எந்தத்தீர்த்தத்தில் தீர்த்தாடன மகோற்சவத்தைச் செய்யல்வேண்டுமென்று கேட்டலும், வியாக்கிரபாதர் அநுக்கிரகிக்கின்றனர். இந்தப் புண்டரிகபுரத்திற்கு வடகிழக்கில் ஸ்நானஞ் செய்பவர்களின் பாவங்களைப்போக்க விளங்குஞ் சமுத்திரத்தில் தீர்த்தாடனஞ் செய்வித்தல்வேண்டும். இதன் விசேஷத்தை அறிவிக்கும் பூர்விக சரித்திரம் ஒன்றிருக்கின்றது. அதையுரைக்கின்றேன். தீர்த்தங்களுக்கெல்லாம் அதிபதியாகிய வருணதேவன் பகை

வர்களை மாய்க்கும் வல்லமைபூண்ட ஓர் அசுரன் நாறுண்டுகடோயுத் தஞ்செய்து வருகையில், ஓர் பிராம்மண சிரேஷ்டர் இவர்களின் யுத் தத்தைச் சமாதானஞ்செய்யவேண்டி இரவில் தனித்து வருணனி டஞ் சென்றார். அப்போது தன்னிடம்வரும் அந்தணரை இராவா தலால் பகுத்துணராது அசுரேந்திரன் இவ்வடிவுகொண்டு வருகின் றனென்று நினைத்துப் பிதியினால் தனது வருணபாசத்தை ஏவலும் பாசத்தாற் கட்டுண்டு அந்தணர் ஆவியிழந்தனர். உடனே வருண தேவன் பெரிதாகிய பிரம்மஹத்தியினாற் பீடிக்கப்பட்டுத் தெய்வ தேஜசு இழந்தவனாகி ஆயினன். உடனே ஜலாதிபதியான வருணன் பாவியானவுடனே சப்த சமுத்திரங்களுஞ் சோஷித்து விட்டன. கடல்கள் வற்றவும் உலகத்தில் மழையில்லாது ஜீவகோடிகள் மிகு ந்த தாபங்களை அடைந்தன. இதைக்கண்ட இந்திராதி தேவர்கள் மிகுந்த வியாகூல சித்தர்களாய் வருணனுடைய பாபத்தை நிவர்த் திக்கவேண்டித் தில்வவனம் வந்து சபேசனையடைந்து சாஷ்டாங்க மாய் நமஸ்கரித்து சந்திரனைச் சடையில் தரித்தவனே! தயாரசம் பொருந்திய கடாக்ஷமுடையவனே! நெற்றிக்கண்ணால் காமனையெரித் தவனே! பாற்கடலிலெழுந்த விஷத்தைத் தரித்தவனே! யானையின் தோலையுரித்தவனே! திரிபுரத்தை எரிக்கச் சிரித்தவனே! கனகச பையை நிர்த்தனஞ்செய்ய வரித்தவனே! என்று ஸ்தோத்திரஞ் செய்து வருணனுடைய பாவத்தைத் தீர்த்தருளல் வேண்டுமென்று வேண்டிநிற்றலும், பகவான் அசரீரியாய் ஓ தேவர்களே! நாம் மாசி மாதத்தில் மகநக்ஷத்திரத்தில் இத்தலத்திற்கு ஈசான்னியதிக்கிலுள்ள சமுத்திரத்தில் வருணனுடைய பிரமஹத்தியை தீர்த்துவைக்கிறோ மென்று அனுக்கிரகித்தலும், ஆனந்தரச பூரணமான திருவாக்கைக் கேட்டுச் சந்தோஷ சித்தர்களாய் தேவர்கள் தத்தம் இடம் சென் றார்கள். வருணன் அப்புண்ணியகாலம் வரும்பொழுது சமுத்திர தீரஞ்சென்று இனி நம்முடைய பாவம் சுருங்கிவிடுமென்று நினைத் திருக்கையில் மக நக்ஷத்திர தினத்தில் பரமேஸ்வரர் பார்வதி சமேத ராய் விருஷபாரூடராய்ச் சிவகணங்கள் சூழ பிரசன்னமாகி வருண னைச் சாகத்தில் ஸ்நானஞ்செய்வித்தலும் பாவங்கள்நீங்கிப் பரிசுத் தமடைந்தனன். உடனே பகவானை நமஸ்கரித்து நாதனே! இனி நான் இவ்விதமான பாவங்களைப்புரியினும் அதை இத்தீர்த்தத்திலே யே தீர்த்தருளல்வேண்டும். அன்றியும் உலகங்களில் ஜீவகோடிகள் செய்யும் பாவங்களையும் இப்புண்ணிய தீர்த்த ஸ்நானதினம் நீக்கியரு ளல் வேண்டுமென்று வரங்கேட்டலும், அவ்விதமே ஆகுகவென்று அனுக்கிரகித்து மறைந்தருளினர். ஆதலால் ஓ பூபாலனே! அப்

புண்ணியதீர்த்தத்தில் உத்திராக்ஷத்திரத்தில் தீர்த்தாடன மகோற்சவத்தை நடத்தல் வேண்டுமென்றுரைத்தலும், ஹிரண்ணியவர்மன் சபாநாதரை தீர்த்தயாத்திரோத்சவத்திற்காக எழுந்தருளச் செய்து வரும்போது ஸ்நானஞ்செய்யவேண்டித் தேவர்களும் முனிவர்களும் சித்தர்களும் யக்ஷராக்ஷஸர்களும் மனிதர்களும் மிகுந்த பிரேமையுள்ளவர்களாய் சமுத்திரதீரமடைந்து சுவர்ணங்களேயும், முத்துரத்தினங்களேயும், பவழங்களேயும் சமுத்திரராஜனுக் குபசாரமாகக் கொடுத்து நடேசர் சந்நிதியில் பாவங்கள்தீர ஸ்நானஞ்செய்து மிகுந்த சந்தோஷத்துடன் அவர்களிடம் சென்றனர். இவ்வித மகோற்சவத்தைநடத்தி பகவானே சிற்சபையிற் பிரவேசஞ்செய்வித்து சாஸ்திரங்களாகிய பயோநிதியின் கரையைக் கண்டவர்களாயும் பிரகஸ்பதிக்குச் சமானமானவர்களாயு மிருக்கின்ற திருஸகஸிர முனீசுவரர்களாலும், பணிகுலசிரேஷ்டரான பதஞ்சலி பகவானுலும், வியாக்கிரபாத மகாரிஷியினுலும், பிரதிதினமும் அர்ச்சிக்கப்பட்ட ஆனந்த நடராஜமூர்த்தியை ஹிரண்ணியவர்ம மகாராஜன் சந்தோஷசித்தனுய்த் தரிசனஞ்செய்து வாழ்ந்திருந்தான்.

கேட்டீர்களோ நைமிசாரண்ணிய வாசிகளான மகரிஷிகளே! மகிமைதங்கிய இப்புண்ணிய மகாத்மியத்தை எவர்கள் படிக்கின்றுர்களோ, எவர்கள் கேட்கின்றுர்களோ, எவர்கள் கேட்டு ஆனந்திக்கின்றுர்களோ, எவர்கள் எழுதுகின்றுர்களோ,! அவர்களுக்கு சிற்சபேசன் அபீஷ்ட பலன்களேயும் முத்திகளேயும் அளிக்கின்றனர் என்று சூதமகாமுனி அருளலும், மகரிஷிகளெல்லோரும் ஆனந்தபரிதர்களாய் சூதாசாரியரை உபசரித்து விடைபெற்றுக்கொண்டு சிதம்பர க்ஷேத்திரமடைந்து சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து சிற்சபாநாதரைத் தரிசித்துப் பூரணதிருப்தியையடைந்து மிகுந்தகளிப்புடன் நித்தியவாசஞ்செய்து சுகித்திருந்தனர்.

இருபத்தாறுவது அத்தியாயம் முற்றிற்று.

சிதம்பர மாத்மியம் முற்றிற்று-

---



உ

திருச்சிற்றம்பலம்.



# தில்லைவாழந்தணர்களுள் ஒருவராகிய உமாபதிசிவாசாரிய சுவாமிகளின் புராண வரலாறு.

---

கணபதி வணக்கம்.

அஞ்சிற்குழலமயன்மாலுங்காணுவொளியன்
சஞ்சிதப்பிராரத்துவஞ்சடையறவறுக்குங்
* குஞ்சரமுகத்துச்சந்திரசேகரர்
நெஞ்சிற்கருதிநிமலனடிசேர்வாம்.

உமாபதி சிவவணக்கம்.

சீர்பூத்தபொதுவிலருணடம்புரியுஞ்சிவபெருமான்றிருத்தந்திட்டு
மேர்பூத்ததிருமுகக்கொண்டுயர்பெத்தான்சாம்பனுக்கெழில்வீடீந்து
பார்பூத்தசிவப்பிரகாசம்முதலாஞ்சாத்திரங்கள்பகர்ந்துநாளுங்
கார்பூத்தகொற்றவன்குடியிலமருமாபதியைக்கருதிவாழ்வாம்.

புண்ணிய க்ஷேத்திரமாகிய இப்பரதகண்டத்தின்கண் தென்னுடுகள் பலவற்றினுஞ் சிறந்ததும் திவ்வியக்ஷேத்திரங்கள்நிறைந்து விளங்கப்பெற்றதுமாகிய சோழமண்டலத்திலே ஸ்ரீ பூலோககைலா

---

* குஞ்சரமுகத்துச் சந்திரசேகரர் என்றது கொற்றவன்குடி உமாபதிசிவாசாரிய மடாலயத்திலிருக்கும், யானைமுகத்தையுடைய விநாயகரின் திருநாமமாம்.

சாகிய சகாப்தத்தின்கண் சற்றேறக்குறைய (475) வருஷங்களுக்கு முன்னே ஸ்ரீ தில்லைவாழந்தணர் குலத்திலோர் தீக்ஷித சுவாமிகளுக்கு நெடுநாளாகப் புத்திரசந்தானமின்றி இருந்து பிறகு திருவருள் கிருபையால் ஓர் புத்திரராகிய உமாபதி சிவாசாரிய சுவாமிகள் திருவவதாரஞ் செய்தருள அந்த சுவாமிகள் முன்பூர்வஜன்மதவோபலத்தை முன்னிட்டு இளமையிலேயே தாம் கற்கவேண்டிய சகல வேதசிவாகமாதிகளை யோதியுணர்ந்து, உபநயன தீக்ஷாவிதியின்படியாவும் செய்யப்பெற்று எழுவயதுக்குள் முடிந்துவிட்டன.

அப்பால் பதினான்கு வயதிற்குள்ளாக சிவபெருமானுக்கு சிவபூசை செய்வதற்குரிய வேதசாஸ்திரார்த்த சிரவண முதலியவைகளுணர்ந்து ஸ்ரீ சாக்ஷாத்காரமாய் விளங்காநின்ற ஸ்ரீசிவபெருமானுக்குச் சிவபூசை செய்துகொண்டு வருவதோடு சரியை, கிரியை, யோகத்துக்குள்ளமுறைமைகளை முன்ஜென்மத்தில்முற்றுப்பெற்று இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாத முதலிய பக்குவத்தோடிருந்துகொண்டு ஸ்ரீசாக்ஷாத் நடேசபெருமானாகிய சிவபெருமான் சதாகாலமும் கனகசபையின்கண்ணே நிருத்தஞ்செய்யும் மகத்துவமும் வியாக்கிரபாத சுவாமிகள் பதஞ்சலி பகவான் இரண்ணியவர்மன் வரலாறு முதலானதுகளில் திருவருள் சிந்தனைநாடி கோயிற்புராணம் ஒன்றுசெய்தும் முறைப்படி ஸ்ரீசாக்ஷாத் ஸ்ரீநடேசப்பெருமானுக்குப் பூசைசெய்துமுடித்து ஆச்சிரமத்துக்கு செல்லுங்காலத்து சோழராசாவால் நியமிகஞ்செய்துவைத்த வழக்கப்படிக்கு நவரத்தினங்களினால் இழைத்த முத்துச்சிவிகையின்கண் இருந்துகொண்டு மேளவாத்தியம் சாம்பிராணிகலசம் பகல்தீவட்டி இன்னம் அநேக விருதுகளுடன் மிருதுவாக வீதிப்பிரதக்ஷிணத்தோடு வா அங்ஙனந் திருக்களாஞ்சேரியின்கண் ணெழுந்தருளி யிராநின்ற மறைஞானசம்மந்த சிவாசாரியார் ஓர் தெருத்திண்ணையில் இருந்துகொண்டு தன்னுடை மாணாக்கர்களுக்கு பாடங்கள் போதித்துக்கொண்டு இருக்குங்காலத்து அங்ஙனம் பாடங்கேட்டுக்கொண்டிருந்த மாணாக்கர்களிலொருவர் போதிக்கும் சுவாமிகளைப்பார்த்து மிகுந்த அச்சத்துடன் எழுந்து நின்றுகொண்டு சுவாமி இவ்விடம் நிழலில் இருக்கின்றவர்களை சூரியகிரணம் தகிக்கின்றதே இப்படியிருக்க ரிஷபமென்கிற வைகாசி மாதத்தில் இந்தக்கடு வெய்யலில் பல்லக்கு, தீவட்டி, மேளம் அநேக சம்பிரதாயங்களோடு யாரோ ஒரு தீக்ஷிதசுவாமிகள் வருகின்றார்களேயென்று சொன்னமாத்திரத்திரத்தில் மறைஞானசம்பந்த சிவாசாரிய சுவாமிகளும் உடனே

பார்த்துவிட்டு அப்பா இது பகல்தருடு என்று சொல்ல இந்த வாக்கு உடனே பல்லக்கின் கண்ணிருந்துகொண்டுவருகிற ஸ்ரீசாக்ஷாத்கார உமாபதிசிவாசாரிய சுவாமிகளுக்கு அகத்தின்கண் திருவருள் கிருபையால் தோன்றியமாத்திரத்தில் இது தருதியல்லவென்று கருதி நிக்கிரகித்து பல்லக்கின் கண்ணிருந்து கீழேயொன்று பூமியில்குதித்து அங்ஙனம் மறைஞானசம்பந்த சிவாசாரிய சுவாமிகளிருக்காநின்ற தெருத்திண்ணைக்கு அருகேசென்று மிகுந்த பயத்தோடு அஷ்டாங்க வந்தன முதலியவை செய்யத் தொடங்கு முன்னமே மறைஞானசம்பந்த சிவாசாரிய சுவாமிகள் வசித்திருந்த ஸ்தானத்தையகன்று ஸ்ரீசாக்ஷாத்ஜெகதீசனுகியசிவபெருமானுக்கு பூசைசெய்து பல்லக்கின்கண் அநேக சம்பிரமத்துடன் வரப்பட்ட உமாபதி சிவாசாரியார் எமக்கு வந்தனம்புரியவருவது யாதுகாரணமென்று திருவுளங்கொண்டு மிகவும் விரைவாகஓட, கூடயிருந்த உமாபதி சிவாசாரிய சுவாமிகளும் பின்தொடர்ந்து ஓட இருவர்களும் முன் பின்னுமாகஓட கடைசியாக செங்குந்தத்தெருவின்கண் சென்று ஒருகாலத்திலேனும் அவ்வண்ணம் நடவாதவர்களாதலாலும் கொடிதான அக்கினிநக்ஷத்திரகாமாதலாலும் மிகவும் மனத்திகைப்புடன் ஓடினவர்களாதலால் அவ்விடத்தில் இருவர்களுக்குஞ் சரீரமுழுதும் வேர்வையுடன் மிகுதியான களைப்புண்டாகி மறைஞானசம்பந்த சிவாசாரிய சுவாமிகள் அங்ஙனம் பாவுதொவையப்பட்ட செங்குந்தர்களைப்பார்த்து அப்பா மிகவும் களையாயிருக்கிறது என்று திருவாக்குசெய்ய அதற்கு அங்ஙனமிருந்த பாவுதொவையப்பட்ட செங்குந்தர்களிலொருவர் சுவாமி பாவுதொவையப்பட்ட கஞ்சியிருக்கிறது கொடுக்கட்டுமா யென்று சொன்னமாத்திரத்திலுடனே அப்பா இது போதும் கொடுக்க என்று சொல்லி உமாபதி சிவாசாரிய சுவாமிகளோடு கூடயிருந்த மறைஞானசம்பந்த சிவாசாரிய சுவாமிகள் இரண்டு கரத்தினாலும் வாங்கிப்புசிக்க புசிக்கும்பொழுது சாப்பிட்டு முழங்கைமூலமாக மிஞ்சி ஒழுகிய கஞ்சியான உச்சிட்டத்தை பூமியின்கண் சிந்தாவண்ணம் அருகிலிராநின்ற உமாபதி சிவாசாரியசுவாமிகள் அதை இரண்டு கரத்தினாலும் ஏற்று மகாகுருப்பிரசாதமாகப் பாவித்து புசித்துவிட்டமாத்திரத்தில் குரு சிஷியர்களென்கிற பாவனை நேர்ந்துவிட்டதைப் பார்த்து, உடனே மறைஞானசம்பந்த சிவாசாரியசுவாமிகள் உமாபதி சிவாசாரிய சுவாமிகளுக்கு ஞானநுக்கிரகஞ் செய்துவிட்டு இருவர்களும் அகன்று பிரிந்துவிட்டார்கள்.

அங்ஙனம் பிரிந்துவிட்ட உமாபதி சிவாசாரிய சுவாமிகளின் பந்துவர்க்கங்களான தில்லைவாழந்தணர்கள் யாவர்களும் ஒன்று சேர்ந்து உமாபதி சிவாசாரிய சுவாமிகள் சூத்திரபானஞ் செய்து விட்டபடியால் இனி அவரை சபைக்குள் புகுந்து பூசை முதலிய வைகளை செய்யவும் முறைகள் கொடுக்கக்கூடாதென்றும், அவர் செய்யப்பட்டிராநின்ற கோயிற் புராணத்தையும் அரங்கேற்றுபடி செய்யக்கூடாதென்றும், ஜாதிப் பிரஷ்டஞ்செய்து நீக்கிவைக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட, அஃதையுணராநின்ற ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் முன்னமே தெரிந்துகொண்டு அங்ஙனமே தில்லைக்குக் கிழ்ப்புரமிராநின்ற இதனடியில்சொல்லப்பட்ட மடத்தின்கண் போயிருந்தார். இது நிற்க.

கௌடதேசமென்னும் ஓர் தேசத்து அரசன் அந்த அரசனுடைய புத்திரரான சுவேதவர்மனென்னும் பெயரையுடையவன் சரீரமுழுதும் வெண்குட்டம் பொருந்தினவனாய் இருந்தான். அவன் முன்ஜென்மத்தில் செய்திராநின்ற புண்ணிய வசத்தாலே மனதில் நல்லுணர்வு தோன்றப்பட்டவனாய் அவன்மட்டும்தனித்து ஸ்ரீ பூலோக கைலாசமென்று நிகழாநின்ற தில்லைவனத்தின் கண்ணே யெழுந்தருளியிராநின்ற ஸ்ரீமூலட்டானேஸ்வரருக்கு வியாக்கிரபாத முனீஸ்வரர்கள் ஆராதனை முதலியவை செய்துகொண்டு அங்ஙனம் தவஞ்செய்துகொண்டிருக்குங்காலத்து ஷை சுவேதவர்மனென்னும் இராசபுத்திரன் ஷை தில்லைவனத்தையடைந்து ஷை வியாக்கிரபாத முனீசுவரர்களையும் ஸ்ரீமூலநாதரையுங்கண்டு பல முறை அஷ்டாங்க வந்தனவழிபாடு முதலியவைகள்செய்து தன்னுடைய சரீரத்திலிருக்கப்பட்ட வெண்குட்டம் நீங்காமலிருக்கிறதை பற்றி மிகுந்த விசனத்தையடைந்தவனாய் மனங்கசிந்துருகி ஷை சுவாமிகள் சந்நிதானத்திலேயே நிற்க, வியாக்கிரபாத முனீஸ்வரர்கள் ஷை சுவேதவர்மனை திருநோக்கஞ்செய்து அப்பா நீ ஆர் என்று வினவ சுவேதவர்மன் ஷை சுவாமிகளைப்பார்த்து மிகுந்த அச்சத்தோடு மனங்கசிந்துருகி தன்னுடைய வரலாறு யாவற்றையுஞ்சொல்லி பின்பு தன்னுடைய சரீரமுழுதும் வெண்குட்டமாகயிருப்பதை தீர்த்தருளவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொள்ள சுவாமிகள் திருவுளம்பற்றி யுடனே பவசாகரத்திலிருந்து நிவர்த்தி செய்யப்பட்டதாயுள்ள மகாபுண்ணிய தீர்த்தமாகிய சிவகங்கையை சுட்டிக்காட்டி அதில்போய் நீர் ஸ்நானஞ்செய்து வரக்கடவது என்று திருவாய் மலர்ந்தருள அப்படியே அச்சுவேதவர்மன் அவ்

வாக்கை சிரமேற்கொண்டு மிகுந்த பேரானந்த மகிழ்ச்சியோடு ஷை தீர்த்தத்தையடைந்து அதிலிறங்கிஸ்நானஞ்செய்து எழுந்தவுடனே முன்னிருந்த வெண்குட்டம் யாதொன்றுமின்றியும் சரீரமுழுதும் இரணியகாலத்தில் சூரியன் ஒளி எப்படி இருக்குமோ அவ்வாறு போல் தங்கசொரூபமாக இருக்கப் பார்த்துவிட்டு ஆனந்தபரவச முற்று உடனே சுவேதவர்மன் வியாக்கிரபாத முனீஸ்வரர்கள் சந்நிதானத்தையடைந்து மிகுந்த மனமகிழ்ச்சியுடனே முன்போல் பலதரம் நமஸ்கரித்து வணங்கிநிற்குங்காலையில் வியாக்கிரபாத முனீஸ்வரர்கள் அச்சுவேதவர்மனை திருநோக்கஞ் செய்து உள்ளத்தின்கண் மிகுந்த ஆனந்தக்களிப்பையடைந்து உடனே சுவேதவர்மனென்னும் பெயர் நீக்கி இரணியகாலத்தில் சூரியனொளியைப் போல் சரீரமுழுதும் இருந்தமையால் இரணியவர்மனென்னும் திருநாமம் சூட்டப்பெற்று இரண்ணியவன்ம சக்கிரவர்த்தியால் யேற்படுத்தப்பட்டிராநின்ற கொற்றவன்குடி யென்னும் நகரத்தில்கண்ணினுள்ள மடத்தில் உமாபதிசிவாசாரிய சுவாமிகள் அங்ஙனம் அனேகத் திருக்கூட்டங்களோடு மெய்கண்டதேவர் சந்ததிக்கு முதன்மையாக குருமுகூர்த்தமாக யெழுந்தருளி அருள் தங்கிய இதனடியில்கண்ட சாத்திரங்கள் முதலியவைகளியற்றியும் தன்னுடைய மாணாக்கர்களுக்கும் அதில்கண்ட சாத்திரங்களைப் போதித்துக்கொண்டு சிவயோகஞான நிஷ்டானுபூதியிலிருந்துகொண்டு வருநாளில் ஸ்ரீ சாக்ஷாத் நடேசமூர்த்திக்கு உற்சவ துவஜாரோகணம் வந்துவிட அந்த உற்சவ துவஜாரோகணம் உமாபதி சிவாசாரிய சுவாமிகளுடைய முன்யேற்பட்டிருந்த நியமிகப்படி முறையில் வந்துவிட அதற்கு தில்லைவாழந்தணர்கள் யாவர்களும் ஒன்றுகூடி இந்தமுறைக்குடைய உமாபதி சிவாசாரியரைத்தான் முறையிலிருந்து நீக்கிவிடப்பட்டதே அவருக்குப் பதிலாக வேறொருவரை நியமித்து துவஜாரோகணத்தை நிறைவேற்றவேண்டியதே தவிர இனி அவரைக்கொண்டுவந்து பூசைமுதலியவைகள் செய்யக்கூடாதென்பதாக தீர்மானித்து, வேறொரு தீக்ஷிதரை நியமிகஞ்செய்து துவஜாரோகணம் நடத்தவேண்டியதற்குரிய வேதவிதிப்படி யாவற்றையும் முடித்து கொடிச்சீலை உயரம் ஏற்றுவிக்க, உயரம் ஏராமல் கீழே அறந்துவிழக்கண்டு மீட்டும் தங்கள் வேதவிதியின் பிரகாரம் அநேக சிரத்தைகள் செய்தும் கொடிச்சீலை உயரம் வராமல் மீட்டும் மீட்டும் கீழே அறந்துவிழக்கண்ட ஸ்ரீ தில்லைவாழந்தணர்களும் மற்றும் அங்ஙனம் தெரிசனம்புரியவந்த புண்ணியவான்கள் முதலிய யாவத்திராளும் கொடிச்சீலையேறாமல் கீழே அறந்தறந்து விழுங்

காரணம் என்னவென்று மிகுந்ததுயரத்தோடு கருதிக்கொண்டிருக்கும் பொழுது தில்லைவாழந்தணர்கள் யாவர்களும் அங்ஙனம் நிலைபொன்று மெய்மறந்து ஸ்ரீசாக்ஷாத்கார சிவபெருமான் மானிட அவதாரங்கொண்டு அகத்தின்கண்தோன்றி நாம் கொற்றவன்குடியின் கண்ணிருக்காநின்ற எமது அடிமைத்தொண்டனாகிய உமாபதிசிவாசாரியருடைய பூசைப்பேடகமான கோயிற்புராணத்தின்கண்ணெழுந்தருளி அங்ஙனம் செய்யாநின்ற பூசை ஆராதனை முதலியவைகளைப்பெற்று எழுந்தருளியிருக்கின்றோம். ஆதலால் அவரைக் கொண்டுவந்து அவருடைய முறைப்படி துவஜாரோகணம் நடத்துவீர்களாகில்கொடியேறப்படுமென்று திருவாய்மலர்ந்தருளிஉடனே மறைந்துவிட, அந்தக்ஷணமே தில்லைவாழந்தணர்கள் யாவர்களும் நித்திரைசெய்து விழித்தவர்களைப்போல் சரீரமுழுதும் உரோமஞ்சிலிர்ப்ப, நெஞ்சந் திடுக்கிடுக ஒவ்வொரு தில்லைவாழந்தணர்களும் பின்பு மனத்தெளிவடைந்து ஒருவரை மற்றொருவர் பார்த்து நாம் உமாபதி சிவாசாரியசுவாமிகள் சாக்ஷாத்கார கடவுளென்று தெரியாமல் கோயில் முறையிலிருந்து நீக்கி இதர தீக்ஷிதரைக்கொண்டு நடத்தின குற்றமல்லவா வென்று யெல்லோரும் ஒன்றுசேர்ந்து மிகுந்த மனவிசாரமடைந்தவர்களாய் உடனே சாக்ஷாத்கார ஜெகதீசனெழுந்தருளப்பெற்றதாயுள்ள இரத்தினபீடமான சிம்மாசனத்தை எடுத்துக்கொண்டு மேளவாத்திய முத்துப்பல்லக்கு முதலான அனேக சம்பிரதாயங்களோடு தில்லைவாழந்தணர்கள் உமாபதி சிவாசாரிய சுவாமிகள் எழுந்தருளியிராநின்ற கொற்றவன்குடியென்னும் நகரத்தையடைந்து சுவாமிகள் சந்நிதானத்தின்கண் வந்தனஞ்செய்துநிற்க, உமாபதி சிவாசாரியசுவாமிகள் திருநோக்கஞ்செய்து இங்ஙனம் நீங்கள் வரலுற்றது யாதுகாரணமென்று வினவ, தில்லைவாழந்தணர்கள் மிகுந்த வணக்கத்தோடு இன்று துவஜாரோகணம் வேதவிதிப்படி நடத்தி கொடிச்சீலை உயரமேற்றுவிக்க, ஏறாமல் மீட்டும் மீட்டும் கீழே அறுந்து விழுவதைக் கண்டு மிகுந்த வருத்தத்தோடு யிருக்கும்பொழுது அங்ஙனம் எங்கள் யாவர்களும்மெய்மறந்து ஸ்ரீசாக்ஷாத்காரகடவுள் மானிட அவதாரம்போல் உள்ளத்தின்கண்தோன்றி நாம் தங்களுடைய திருநாமத்தைச் சொல்லி தங்களுடைய பூசைப் பேடகமான கோயிற்புராணத்தின்கண்ணெழுந்தருளி அங்ஙனம் நடாத்தும் பூசை ஆராதனை முதலியவைகளை பெற்றுக்கொண்டு யெழுந்தருளியிருக்கின்றோம். ஆதலால் அவரை அழைத்துவந்து துவஜாரோகணம் அவர் முறைப்படி செய்வீர்களானால் கொடியேறப்படுமென்று திருவாய்மலர்ந்தருளி மறைந்தவண்

ணம், சுவாமிகளைக்கொண்டு கொடி ஏற்றுவதற்கு எழுந்தருளுதல் செய்து கொண்டுபோக வந்தோமென்று யாவர்களும் திருவாக்கு செய்தமாத்திரத்திலுடனே ஸ்ரீசாக்ஷாத்காரசிவஞானசொரூபராகிய உமாபதி சிவாசாரிய சுவாமிகள் ஐயனுடையகிருபை இவ்வண்ணம் திருவுளங்கொண்டு யிருக்கிறதோவென்று உள்ளத்தில் மிகுந்த ஆநந்தக்களிப்பு முற்று வருவதற்குத் தடையில்லையென்று திருவாய்மலர்ந்தருளி உடனேஜெகதீசன் எழுந்தருளுதல் செய்யாநின்ற இரத்தினபீடமான சிம்மாசனத்தில் சுவாமிகளுடைய பூசைப் பேடகத்தையும் வைத்து எல்லோரும் வாருங்களென்று உமாபதி சிவாசாரிய சுவாமிகள் திருவாக்குசெய்தருள தில்லைவாழுந்தணர்களுடன் கொண்டுவாராநின்ற முத்துச்சிவிகையின்கண் ணெழுந்தருளி வரவேண்டுமென்று யாவர்களுங் கேட்டுக்கொள்ள அதற்கு உமாபதிசிவாசாரிய சுவாமிகள் வேண்டுவதில்லையென்று திருவாய்மலர்ந்தருளி பாதசாரியாக திருக்கோயிலையடைந்து நிற்க, இன்று துவஜாரோகணம் வழக்கமாக சோழமகாராஜாவால் நடத்திவருவதாக யிருந்தும் துவஜாரோகண உற்சவக்கொடியேறாமல் இருக்கிற காரணம் திருவள்ளுவநாயனார் குறளில், "அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய், நின்றது மன்னவன் கோல்" என்றவாக்கியப்படிக்கு ஷை அரசன் தில்லைவாழுந்தணர்களை என்னகாரணமென்று கேட்டு ஓர்விதயேற்பாடு செய்யவேண்டிய கடமையிருக்க, அவ்வரசன் இவ்விஷயங்களை கவனியாமலிருந்த காரணத்தை முன்னிட்டோ வேறு என்ன காரணமோ சுவாமிகள் அங்ஙனந் திருவுளங்கொண்டு அடிமையினுடைய ஆசானுக்கு அமுதளித்த மேன்மை பொருந்திய செங்குந்தர்களை அழைத்துவரும்படி உத்திரவு செய்ய உடனே அங்கிருந்தவர்கள் செங்குந்தர்களை அழைத்துவந்துவிட அச்செங்குந்தர்கள் சுவாமிகள் சந்நிதானத்தின்கண் வந்தனம் புரிந்து எதிரிலே நிற்க, சுவாமிகள் ரிஷபக்கொடியொன்று ஷையார்களிடங்கொடுத்து இதை மேளவாத்தியங்களோடு வீதிப்பிரதக்ஷிணஞ் செய்துவரும்படி ஆக்ஞாபிக்க, அவ்வண்ணம் அச்செங்குந்தர்கள் அத்திருவாக்கை சிரமேற்கொண்டு மிகுந்தபக்தியோடு சுவாமிகள் ஆக்ஞாபித்தபடி மேளவாத்தியங்களோடு ரிஷபக்கொடியை வீதிப்பிரதக்ஷிணஞ் செய்துவந்தபிறகு துவஜாரோகணம் நடத்தவேண்டிய ஆகமவிதியின்படியாவற்றையுஞ் செய்துமுடித்துவிட்டபின்பு கொடிமரத்தருகில் உமாபதி சிவாசாரியசுவாமிகள் நின்றுகொண்டு கொடிக்கவியான ஸ்ரீபஞ்சாக்ஷரப் பாசுரத்தைத் திருவாய்மலர்ந்தருள, உடனே ஒருவரும் ஏற்றுவிக்காமல் தற்செயலாகவே

நேராகக் கொடியேறிவிட்டது. இப்படி யேறிவிட்டமாத்திரத்தி லுடனே அங்ஙனந் தெரிசிக்க வந்திராநின்ற புண்ணிய புருஷர்கள் யாவத்திராளும் ஆனந்தமகிழ்ச்சியடைந்ததோடு ஸ்ரீ தில்லை முனீஸ்வரர்களும் பேரானந்தமுற்று, மன நடுக்கத்தோடு எல்லாத் தில்லை வாழந்தணர்களும் உடனே ஆச்சரியப்பட்டார்கள். சுவாமிகளுள்ளத்தில் மகிழ்வோடு கொடிக்கவியை முற்றுசெய்துவிட்டு அங்ஙனமே செங்குந்தர்களைக் கூப்பிட்டு நிற்க, சிவஞான சொரூபராகிய திருவள்ளுவநாயனார் இல்லறத்தின் நிலைமையை உலகத்தாருக்குக் காரணார்த்தமாக நடத்திதெரிவிக்கும்பொருட்டாக விவாகஞ்செய்து கொண்டு இல்லறஞ்செய்துநெய்தற்றொழில் பாவமில்லாததென்று திருவுளங்கொண்டு ஏலேலசிங்கனிடத்தில் நூல் வாங்கி ஆடை நெய்து அக் கூலியாள் ஜீவனஞ்செய்துவந்ததுபோல நீங்கள் முன் சென்மத்தில்செய்திருந்த புண்ணியத்தைமுன்னிட்டு பாவமில்லாத தொழில் நடத்திவருகிறபடியால் இனி நீங்களே இந்த துவஜாரோகணத்தை ஒவ்வொரு உற்சவத்திற்கும் உங்களுடைய திரவியத்தைக்கொண்டே நடத்திவரவேண்டுமென்று ஸ்ரீசாக்ஷாத்கார உமாபதிசிவாசாரிய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருள புண்ணியவான்களான செங்குந்தர்கள் அந்தப்படி சுவாமிகள் ஆக்ஞாபித்த உத்திரவின்படி நடந்துவருகிறோமென்று யாவர்களும் உடனே வாக்குத் தத்தஞ் செய்தார்கள்.

பிறகு உமாபதி சிவாசாரியசுவாமிகள் தாம் எழுந்தருளியிரா நின்ற கொற்றவன்குடி நகரத்தின்கண்ணே வந்திருந்துகொண்டு அங்ஙனஞ் சிஷியர்களுக்குப் பாடபோதனை சிவாநுபூதி முதலானவைகள் செய்துக்கொண்டு சிவாநுபூதி நிஷ்டையிலிருந்துவருநாளில் ஷை தில்லைவனமென்னும் சிதம்பர எல்லைக்கு அரசன் ஆளுகைக்குள் காவலாக இருந்துவந்த சாம்பான் வம்சத்தில் ஓர் பெற்றான் சாம்பன் முன்ஜென்மத்தில் என்னதபோபலக்குறைவு முன்னிட்டு நீசவவதாரஞ்செய்ய ஏற்பட்டதோ அந்தப் பெற்றான்சாம்பன் உள்ளத்தில் மிகுந்த அன்புடன் சதாகாலமும் சிவபெருமானையே தியானித்துக்கொண்டும் நாடோறும் திருக்கோயிலுக்கு வெளியே நின்றுகொண்டு திருக்கோயிலிருந்து சிவபெருமானை தெரிசித்து வரும் சிவனடியார்களைக்கண்டு மனங்கசிந்துருகி பயபக்தியோடு வந்தனஞ்செய்துகொண்டு பின்பு சேரிக்கி போகும்போது முன் பிறப்பில் என்ன பாவஞ்செய்தேனோ இந்த நீசப்பிறவிபெற்று திருக்கோயிலுக்குள் புகுந்து தெரிசிக்கயில்லாமல் ஆய்விட்டேன்

என்று பலவாறாக மனவிசனத்துடன் செல்லும்போது, இப்பிறப் பிலாவது சிவபெருமானுக்கு ஓர் திருப்பணிவிடை செய்துவந்தால் மறுஜெனனத்திலாவது நல்லகெதியை அடையக்கூடாதாவென்று கருதி நாம் சிவபெருமானுக்குச் செய்யத்தக்க பணிவிடையாது என்று யோசித்து விறகு கொண்டுவந்து தினந்தோறும் போட்டு வந்தால் சிவபெருமானுடைய நிவேத்தியம் வைப்பதற்கு உபயோ கப்படமாட்டாதாவென்று மனதில் திடக்கருத்துடன் காட்டின் கண் சென்று விறகுவெட்டி சக்திக்குத்தகுந்தபடி கட்டிக்கொண்டு வந்து கீழ்சந்நிதிக்கெதிரில் பூமியில் இறக்கிவைத்துக்கொண்டிருக் கும்போது திருக்கோயிலிலிருந்து ஓர் பிராமணப்பிள்ளை வெளியே வந்து பெற்றான்சாம்பானைப் பார்த்து விறகுக்கட்டு விற்கிறதா வென்று கேட்க, சாம்பான் பிராமணரைப்பார்த்து சுவாமி விற்கப் படுகிறதில்லை நடேசப்பெருமானுக்கு தினந்தோறும் விறகு பணி விடைசெய்துவரவேண்டுமென்று எண்ணங்கொண்டு இன்று கொ ண்டுவந்தேன் இதை சுவாமிகளுக்கு நிவேத்தியம் வைப்பதற்கு உபயோகப்படுத்திக்கொள்ளும்படி தெரிவிப்பதோடு இந்த விறகுக் கட்டை மடப்பள்ளிக்குள்ளே சேர்ப்பித்துவிட வேண்டுமென்று வணக்கமாய் சொல்ல, கேட்டபிராமணர் இந்த நீசனிடமனதில் இவ்வளவு பக்தியுடன் கொண்டுவந்திருக்கிறது இவன் முன்செய்த புண்ணியத்தொடர்புதான் என்று நினைத்து விறகுக்கட்டை மடப் பள்ளிக்குள் சேர்ப்பித்துவிடலானார். பெற்றான்சாம்பான் அங்ங னமே நின்றுகொண்டு சிவபெருமானுக்கு உச்சிக்கால பூஜைசெய்து முடிவாகிற பரியந்தம் திருக்கோயிலிலிருந்து சிவபெருமானைத் தெரிசித்துவரும் சிவனடியார்களைக்கண்டு தெரிசித்துக்கொண்டு உச்சிக்காலபூசை தீபாராதனை முடிந்தவுடன் வீதிப்பிரதக்ஷிணஞ் செய்துகொண்டு தன்னுடைய சேரிக்குச்சென்றுவிடுகிறது. இந்தப் படிக்கு பெற்றான்சாம்பான் விறகுபணிவிடைசெய்துவந்து மூன்று நாள் வழக்கமாக வீதிப்பிரதக்ஷிணஞ்செய்துவரும்போது பெற்றான் சாம்பான் செய்துவந்த திருப்பணிவிடையைச் சுவாமிகள் திருவு ளங்கொண்டு சாம்பான் ஜீவனத்துக்கு ஆக தெற்கு சந்நிதிக்கெதி ரில் நிலத்தில் பெற்றான்சாம்பானுக்குத் தோன்றும்படியாக இர ண்டு பணமிருக்க, அதை பெற்றான்சாம்பான் நேரேபார்த்துவிட்டு இதையார் கைதவறி மறந்து போட்டுவிட்டார்களோ என்று பலவா றாக மனதில் யோசித்துக்கொண்டு நிற்கும்போது ஸ்ரீசாக்ஷாத்கார சிவபெருமான் அசரீரிவாக்குபோல் சாம்பான் செவியில் கேட்கும் படி உனக்குத்தான் அப்பா வைத்திருக்கிறது அதை நீயெடுத்துக்

கொள்வாயாக வென்று சொல்லக்கேட்ட பெற்றான் சாம்பான் நிறைந்த மனத்திடுக்கிட சரீரம் விதிர்ப்புற்று மிகுந்த ஆனந்த பரவசனுப் தெளிவடைந்து நிலத்தின்கண்ணிருந்த இரண்டு பணத்தையும் எடுத்துக்கொண்டு தனக்குவேண்டிய அமுதுபடி வகையறுக் கடைச்சிலவுகளைப்போய் வாங்கிக்கொண்டு தன்னுடைய சேரிக்குச் சென்று அன்றுதின காலக்ஷேபம் நடத்தி மறுதினம் வழக்கம் போல் விறகுக்கட்டை போட்டுவிட்டு வீதிப்பிரதக்ஷிணைஞ்செய்து வரும்போது முன்னிருந்த ஸ்தானத்தின்கண்ணே இரண்டுபண மிருக்கக்கண்டு அதை யெடுத்துக்கொண்டு தனக்குவேண்டிய அமுதுபடி வகையறு கடைச்சிலவுகளைபோய் வாங்கிக்கொண்டு சேரிக்குள் சென்று தன்னுடைய காலக்ஷேபத்தை நடத்திக்கொண்டு இந்தப்படி நடந்துவருநாளில் ஓர்நாள் வழக்கப்படி விறகுக்கட்டு கொண்டுவந்து சந்நிதிக்கெதிரிலிறக்கிவிட்டு நிற்கும்போது ஸ்ரீ சாக்ஷாத்கார சிவபெருமான் ஓர் பிராம்மண வடிவங்கொண்டு சாம்பானைப்பார்த்து அப்பா நீ நாளைபதினமுதல் கொற்றவன்குடியில் உமாபதிசிவாசாரியசுவாமிகள் இருக்கிறார்கள் அந்த சுவாமிகளுக்கு தினந்தோறும் இங்கே போட்டுவந்த வழக்கம்போல் அங்கே போட்டுவரக் கடவாய் என்று ஆக்ஞாபித்து உடனே சுவாமிகள் அந்தர்த்தானமாய்விட பெற்றான் சாம்பான் மனந்திடுக்குற்று இவ்விடம் வந்தது கடவுள் அல்லவாவென்று மனமலர்ச்சியோடு மறுதினமுதல் வழக்கம்போல் ஸ்ரீ நடராஜமூர்த்திகளுக்கு முன்னே ஓர் கட்டுகொண்டுவந்து போட்டுவிட்டு பின்பு காட்டின்கண் சென்று இரண்டாவது விறகு வெட்டி ஓர்கட்டு கொற்றவன்குடியின் கண்ணே சென்று சுவாமிகள் மடத்திற்கு வெளியே போட்டுவிட்டு சேரிக்குச் சென்றுவிடுகிறது.

இப்படி வழக்கமாக சிலகாலம் நடத்திவரும்போது ஓர் தினத்தில் சிவபெருமான் பெற்றான்சாம்பான் செய்துவரும் விறகு பணிவிடையைப் பரிசோதிக்கும் பொருட்டாக மிகுதியான மழை பெய்விக்கச் செய்து ஊர் முழுதும் வெள்ளமாய் போய்விட, சாம்பான் காட்டிற்குச்சென்று விறகு வெட்டிவர ஏதுவில்லாமல் பெற்றான் சாம்பான் உள்ளத்தில் மிகுந்த வருத்தத்தோடு வழக்கமாக இது வரையில் நடத்திவந்தபணிவிடை இன்று தவக்கப்பட்டு விட்டதே இதற்கு யாதுசெய்வேன் என்று மிகுந்த துக்கவிசாரம் பொருந்தினவனுப் சமுசாரத்தினிடமாக சொல்லிக்கொண்டே கண்களில் கண்ணீர் தாரைதாரையாக பொழிந்துகொண்டிருக்குங் காலத்து

பெற்றான்சாம்பானுக்கு மோக்ஷானந்தகதி சமீபித்துவிட ஸ்ரீசாக்ஷாத்கார சிவபெருமான் மானிட அவதாரங்கொண்டு விபூதிருத்திராக்ஷம் திருமேனிமுழுதும் நிறைய அணிந்துக்கொண்டு தண்டு கமண்டல முதலியவைகளோடு பாதரக்ஷை சகிதமாய் பெற்றான் சாம்பானிருக்கும் சேரிக்குள்சென்று அடாசாம்பான் இங்கேவாடா வென்று மிகுந்த சப்தத்தோடு திருவாய் மலர்ந்தருள, உள்ளேயிருந்த பெற்றான் சாம்பான் கேட்டு உடனே வெளியே வந்து சுவாமிகளைப்பார்த்து நமஸ்கரித்து சரீரநடுக்கத்தோடு கண்களிலிருந்து தாரைதாரையாக நீர்சொரிய மிகுந்த அச்சத்தோடு நிற்கும் போது சுவாமிகள் மிகுந்த கடுமையாக பெற்றான்சாம்பனைப் பார்த்து இன்றைபதினம் விறகுக்கட்டு மடத்துக்கு ஏன் கொண்டு போய் போடவில்லையென்று திருவாய்மலர்ந்தருள உடனே சாம்பான் முன்னிருந்த வருத்தத்திற்குமேல் மிகுதியாக மனதில் துயரமுண்டாகி சுவாமி, இன்று மழையினல் எங்கும் வெள்ளங்கொண்டிருப்பதால் காட்டின்கண்ணே சென்று விறகுவெட்டி வருவதற்கு வழிதெரியாமல் தவக்கப்பட்டது என்று சொல்ல. அஃதை சுவாமிகள் திருவுளங்கொண்டு அடாசாம்பா, இன்றையதினக்கட்டுடன் நாளையத்தினம் தவறாமல் கொற்றவன் குடி மடத்திலிருக்கும் சுவாமிகளுக்குக்கொண்டுபோய் போட்டுவரக்கடவாயென்று திருவாக்கு செய்ய, பெற்றான்சாம்பன் கேட்டு. அந்தப்படிசெய்கின்றேன் வழிதெரியாமல் எங்கும் வெள்ளமாக யிருக்கிறதே கொற்றவன்குடி மடத்திற்கு எப்படிக்கொண்டுபோவேன் என்று மிகுந்த பயபக்தியோடு கேட்டுக்கொள்ள சுவாமிகள் சாம்பானைப்பார்த்து, நீ விறகு கட்டு கொண்டுபோகுமுன்னமே கங்காநதியைப் பார்த்து வணங்கி நமஸ்கரித்துக்கொண்டு நான் கொற்றவன் குடியிலிருக்கும் உமாபதி சிவாசாரிய சுவாமிகளுக்கு விறகுகொண்டுபோக வழிதிறக்க வேண்டுமென்று கேள், அந்தப்படி கங்காதேவி வழிவிடுப்பாள், நீ அங்கேகொண்டுபோய் போடக்கடவது இதில் எவ்வளவும் நீ தவறுதல் செய்யக்கூடாது என்று திருவாய்மலர்ந்தருளியதோடு, சுவாமிகள் ஓர் சீட்டில், "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன் கொற்றவங்குடியார்க்கெழுதிய கைசீட்டுப்-படியின்மிசை, பெற்றான்சாம்பனுக்குப் பேதமற தீக்கைசெய்து, முத்தி கொடுக்க முறை" அம்பலவாணர் கெட்டெடுத்துள்பட ——— என்று எழுதி பெற்றான்சாம்பனிடங்கொடுத்து நாளையத்தினம் நீ விறகுக்கட்டு கொண்டுபோகும் போது கூட இந்தச் சீட்டையுங் கொண்டுபோய் ஷை மடத்திலிருக்கும் உமாபதி சிவாசாரிய சுவாமிகளிடம் கொடுக்கக்கடவது என்று

திருவாய் மலர்ந்தருளியவுடனே சுவாமிகள் சாம்பான் பார்வைக்கு
முன்னிலையில் அந்தர்த்தானமாய் விட்டார். உடனே பெற்றான்
சாம்பான் சுவாமிகளைக்காணாமல் திடீரென்று கீழேவிழுந்து மன
வியாகூலனாய் இவ்விடம் வந்தது கடவுளே மானிட அவதாரம்
போல் வந்து மறைந்தருளிவிட்டது. இவ்விடம் வந்தது கடவுள்
என்று தெரியாமல் என் அஞ்ஞானத்தினால் வாயில்வந்ததுகளை
யெல்லாம் சொல்லியதைப்பற்றி சுவாமிகள் என்ன செய்வார்களோ
வென்றும், வந்த கடவுளிடமும் நான் ஓர்வித முத்திக்குரிய கதி
யையும் கேட்காமல் போய்விட்டேனே இனிமேற்படி கடவுள்தெரி
சனம் எக்காலத்தில் கிடைக்குமோ அறிகிலேனே என்று மிகுந்த
மனவருத்தத்தோடு கூறிக்கொண்டு பிரண்டு பிரண்டு கண்ணீர்
தாரை தாரையாக ஒழுக, பின்பு ஒருவாறாக மனத்தெளிவுடன்
எழுந்து மனையாளிடத்தில் சென்று கலந்து நாளையதினம் சுவாமி
கள் செய்த உத்திரவின்படி விறகுக்கட்டு எப்படியாவது கொண்டு
போவதுதான் தகுதியே தவிர வேறேயாதொரு யோசனை செய்வ
தினால் பயனில்லையென்று எண்ணி விறகுக்குப் பிறிவழியின்மை
யால் சாம்பான் குடியிருக்கும் வீட்டைப் பிரித்து அதிலிருக்கப்
பட்ட மரங்களைப்பிளந்து இரண்டு கட்டாகக்கட்டி தான் ஓர்கட்டும்
தன்னுடைய பெண்சாதி ஓர்கட்டுமாக எடுத்துக்கொண்டு போகும்
போது சுவாமிகளுத்திரவின்படி பெற்றான்சாம்பான் கங்காதேவி
யைப்பார்த்து, கங்காதேவியே! நாங்கள் கொற்றவன் குடியிலிருக்
கும் உமாபதி சிவாசாரிய சுவாமிகளுக்கு விறகுக்கட்டு கொண்டு
போக வழிபிரிந்துவிடவேண்டுமென்று மிகுந்த வணக்கத்துடனே
சொல்ல, உடனே கங்காநதி எங்கும் வெள்ளமாயிருந்தது பளிரெ
ன்று வழிபிரித்துவிட, பெற்றான்சாம்பான் மிகுந்த ஆனந்தக்களிப்
போடு சுவாமிகள் உத்திரவின்படி கொற்றவன்குடி மடத்திற்குச்
சென்று வெளியே பெண்சாதியோடு விறகுக்கட்டைச்சாற்றிவிட்டு
நிற்க.

அப்போது உமாபதி சிவாசாரிய சுவாமிகளுக்குத் திருத்
தொண்டுகள் செய்துவரும் சிஷர்களில் ஒருவர் சுவாமிகளைப்பார்
த்து நெடுநாளாக மடத்திற்கு வெளியே தினப்படி ஓர்விறகுக்கட்டு
யிருக்கிறது அதையெடுத்துவந்து தினப்படி நிவேத்தியம் முதலா
னதுகள்வைக்க உபயோகப்படுத்திவந்தது இரண்டுதினமாக வெளி
யே விறகுக்கட்டு இராமல் அதினால் நிவேத்தியங்கள் வைப்பதற்கு
தவக்கப்படுகிறதென்று சொல்ல, உமாபதி சிவாசாரிய சுவாமிகள்

அவ்விஷயங்களை திருவுளங்கொண்டு சீட்டைப்பார்த்து இதுவரை யில் வெளியே விறகுக்கட்டு இருக்கும்விபரம் தெரிவிக்காமலும் ஷை விறகுக்கட்டு இன்னார்கொண்டுவந்து போடுகிறவிஷயமும் தெரிந்து தெரிவிக்காமலும் இருந்து விட்டீர்கள். போகட்டும், இனிவிறகுக்கட்டு கொண்டு வருவதைப்பார்த்திருந்து உடனே நமக்குத் தெரிவிக்கக் கடவது என்று சுவாமிகள் ஆக்ஞாபிக்க, சிஷர், சுவாமிகள் செய்த உத்திரவுபடி செய்கிறேனென்று மறுவுத்திரங் கூறிவிட்டு, சாதாரணமாக சிஷர் வெளியே வர, பெற்றான்சாம்பான் விறகுக்கட்டுக் கொண்டுவந்து சாத்திவிட்டு நிற்கிறதைப்பார்த்து விட்டு சிஷர் உடனே சுவாமிகளிடம் சென்று தெரிவிக்க, சுவாமி களுடனே வெளியே வந்து சாம்பானைப்பார்த்து நீயாரப்பா உன்னு டையவரலாறு என்னவென்றுவினவ, பெற்றான்சாம்பான் சுவாமி களைப்பார்த்து வழிபட்டு, மிகுந்த அச்சத்தோடு நின்றுகொண்டு விறகுபணிவிடை எடுத்துக்கொண்டதுமுதல் சிவபெருமான் சேரிக் குவந்து நிகழ்ந்த உத்திரவுகள் பரியந்தம் சொல்லிமுடித்து சேரியில் சிவபெருமான் கொடுத்த சீட்டை உமாபதிசிவாசாரிய சுவாமிகளி டம் அங்கிருந்த சிஷர்கள் மூலமாய் பெற்றான்சாம்பான் சீட்டைக் கொடுத்துச் சேர்ப்பிக்க, உடனே உமாபதிசிவாசாரிய சுவாமிகள் சீட்டை வாங்கிப்பார்த்து இரண்டு கண்களிலும் ஒத்திக்கொண்டு அகத்தின்கண்மிகுந்த பேரானந்தமுற்று இந்த நீசனிடமும் சுவாமி கள் திருவுளங்கொண்டு நேரே பிரசன்னமாகியும் இப்பேர்ப்பட்ட திருமுகம் கிடைக்கப்பெற்றதும் இவன் முன்ஜெனனத்தில் செய்தி ராநின்றதபோபலந்தான் என்று உள்ளத்தின்கண் ஆநந்தமகிழ்ச்சி யோடு கடவுள்அனுப்பிய திருமுகச்சீட்டில் கண்டஆஞ்ஞைப்படி நடத்துவதற்கு உடனே பெற்றான்சாம்பானைக் கூப்பிட்டு நீ இந்த வெள்ளக்குளத்தில்போய் ஸ்நானஞ்செய்து வரக்கடவது என்று சுவாமிகள் திருவாய்மலர்ந்தருள, அந்தப்படி பெற்றான்சாம்பான் சுவாமிகள் செய்த உத்தரவின்படி எதிரேயிருக்கும் வெள்ளக்குள த்தில்போய் ஸ்நானஞ்செய்துவிட்டு சுவாமிகள் சந்நிதானத்தின் கண்ணேநிற்க, உமாபதிசிவாசாரிய சுவாமிகள் சிவாகமவிதிப்பிர காரம் மந்திராதிதீக்கை முதலியவைகளை செய்து நேரேதிருக்கண் சாத்தி ஞானதிருஷ்டியால் பார்த்தமாத்திரத்தில் உடனே ஜோதி யைப்போலுண்டாக, அதில் பெற்றான்சாம்பான் ஐக்கியமாய்விட அருகிலிருந்த மோக்ஷானந்தம் பெற்றுவிட்ட பெற்றான்சாம்பன் மனைவி இப்போது இங்கே இருந்தஎன்புருஷனை மடத்துச்சாமியார் அக்கினியில் எரித்து விட்டாரே நான் இதற்கு என்னசெய்வேன்

என்று அலறி அலறி கீழேவிழுந்து புரண்டு அழ, அழும்சாம்பான் மனைவியை சுவாமிகள்கூப்பிட்டு உன்னுடைய புருஷன் முன்சென் மத்தில்செய்திருந்ததபோபலத்தினல் இப்போது இங்கே மோக்ஷா னந்தம் அடைந்து விட்டான். நீ பயப்படாதே யென்று சொல்ல, அவள் அதை ஒன்றும்செவியின்கண் கேளாமல் விசனப்பட்டுக் கொண்டு சுவாமிகளே நீங்கள்இப்போதிருந்த என்புருஷனை அக்கி னிச்சுவாலேயில் எரித்து விட்டீர்களே இது என்ன அநியாயமென்று சொல்ல, அதற்குசுவாமிகள் அவளுக்குதேறுதல் சொல்லியும், அவள் கேளாமல் இந்த நீதியை அரசனிடத்திலாவது போய் தெருவித் தால் அவர்களாவது வந்துகேட்கமாட்டார்களாவென்று கூறிக்கொ ண்டுஉடனே அரசனிடம்போய் சமுகத்திற்குமுன்பாக கீழே விழு ந்து அலறி அலறி புரண்டு அழுதுக்கொண்டு நிற்கும்போது, அரசன் பார்த்து, நீ யார்என்றுவினவ சாம்பான்மனைவி மடத்துச்சாமியாரு க்கு தினம் ஓர் விறகுக்கட்டும் நடேசமூர்த்திக்கு ஓர்விறகுக்கட்டு மாகப் போட்டுவரும்நாளில் ஓர் நாள் மிகுந்தமழைபெய்து எங்கும் வெள்ளமாயிருக்க, காட்டிற்குச்சென்று விறகுவெட்டிவர வழிதெரி யாமலிருந்து தினப்படி விறகுபணிவிடை செய்து வந்து இன்றைய த்தினம் செய்யத்தவறிவிட்டதே என்று என் புருஷன் மிகுந்தமன வருத்தத்தோடு அழுதுக்கொண்டிருக்கும்போது, கடவுளே மானிட அவதாரம்போல் சடைமுடி பாதரக்ஷையோடு நாங்களிருக்கும்சேரி க்குவந்து அடே சாம்பான், இங்கே வாடாவென்று கூப்பிட்டார் கள். உடனே என் புருஷன் வெளியேவந்து கும்பிட்டு நிற்கிற போது அந்தசுவாமிகள் என்புருஷனைப்பார்த்து மிகுந்த கடூரமாக இன்றையத்தினம் விறகுக்கட்டு வழக்கம்போல் என் கொண்டுபோய் போடாமல் தவறிவிட்டாய் என்றுகேழ்க்க, என் புருஷன் மழை பெய்துஎங்கும் வெள்ளமாயிருக்கிறபடியால் காட்டிற்குச்சென்று விறகு வெட்டிவர வழிதெரியவில்லை ஆகலால் இன்று தவறிவிட் டது என்றுசொல்ல, சுவாமிகள் எப்படியாவது நாளையத்தினம் இன்றையத்தினக்கட்டுடன் சேர்த்து கொற்றவன்குடியிலிருக்கும் உமாபதிசிவாசாரியருக்குக் கொண்டுபோட் போடவேண்டுமென்று கடுமையாக உத்திரவு செய்தும், ஓர் ஓலையில் சீட்டு ஒன்று எழுதி என்புருஷனிடங்கொடுத்து இதை நீ விறகுக்கட்டுடன் கொண்டு போய் அந்த சுவாமிகளிடம் கொடுவென்று சொல்லிவிட்டு உடனே சுவாமிகள் மறைந்துவிட்டார்.

மறைந்தவண்ணம் என்புருஷன் கீழேவிழுந்து அலறி அலறி அழுது, மிகுந்த வருத்தத்தோடு எழுந்து இங்கே வந்தது கடவுள் என்று முன்னமே தெரியாமல் விட்டதே என்று மிகுந்த விசனத்துடன் இனி அந்தக்கடவுளை எக்காலத்தில் தெரிசிக்கக்கிடைக்குமோ தெரியவில்லையேயென்று மிகுந்தமனவருத்தத்துடன் சொல்லிவிட்டு சுவாமிகள் செய்த உத்திரவின்படி நடப்பதே தகுதியென்று மனதில் ஆலோசித்து விறகுக்கு வேறுவழியில்லாமையால் நாங்கள் குடியிருக்கும்வீட்டைப்பிரித்து அதிலிருந்த கழி மரங்களைப்பிளந்து இரண்டு கட்டாசுக்கட்டி நான் ஓர்கட்டும், என்புருஷன் ஓர்கட்டுமாக எடுத்துக்கொண்டுவந்து சுவாமிகள் உத்திரவு செய்தபடி உமாபதிசிவாசாரிய சுவாமியார் மடத்திலேபோட்டுவிட்டு நிற்கிறபோது உள்ளேயிருந்து ஒருசாமியார் வெளியேவந்து என்புருஷனைப்பார்த்து, நீயாரப்பா, உன்னுடையவரலாறு என்னவென்றுகேட்டார். அதற்கு என்புருஷன் ஆதிமுதல் முடிவுவரையில் நடந்த விறகுப்பணிவிடை விஷயசங்கதிகள் யாவற்றும் சொல்லி சேரியில் சுவாமிகள் வந்துகொடுத்த சீட்டை மடத்துச்சாமியாரிடம் கொடுத்துவிட்டு நிற்க, அந்தச்சீட்டை சாமியார்பார்த்துவிட்டு எதிரேயிருக்கும் வெள்ளக்குளத்தில் என்புருஷனைமட்டும் ஸ்நானஞ்செய்துவாவென்றுசொல்ல, அந்தப்படி என்புருஷன் அடி குளத்தில் ஸ்நானஞ்செய்துவிட்டு சுவாமியாருக்கு நேரே நிற்கிறபோது திடீரென்று ஓர் அக்கினியை உண்டாக்கி அதில் என்புருஷனை எரித்துவிட்டார் இதற்கு நான் என்னசெய்குவேன் என்று மிகுந்த துயரத்தோடு அழுதுக்கொண்டு சொல்லியதுடன் எஜமான்கள் வந்துவிசாரித்து என்புருஷனைக்காட்டும்படிசெய்யவேண்டுமென்று கேட்க, அரசன் இத்தியாதிவிஷயங்களை சொல்லக்கேட்டுப்பின்பு அகத்துஞானமில்லாதவனாதலால் இது என்ன அநியாயம், விறகுகொண்டுவந்து போடவாவது சாமியார் அக்கினியில் சாம்பானை எரித்துவிடவாவது இது என்னகாரணமென்று யோசித்து மந்திரி முதலானவர்களோடுசொல்லி அரசன் தான்இருக்கும் ஸ்தானத்தைவிட்டு அகன்று மந்திரிபிரதானி முதலானவிருதுகளுடனே புறப்பட்டு ஸ்ரீசாக்ஷாத்கார உமாபதிசிவாசாரிய சுவாமிகளை விசாரிக்கும் பொருட்டாக வருவதை இங்ஙனம் சுவாமிகள் ஞானநோக்கால் தெரிந்து இவ்விடம் விசாரிக்கவேண்டுமென்று எண்ணிவரும் அரசருக்கு திருஷ்டாந்தரூபகரஞ் செய்து காண்பிக்காவிடில் அரசன் வார்த்தைமூலமாக நம்பமாட்டான் என்று சுவாமிகள் திருவுளங்கொண்டு

திருஷ்டாந்தரூபகாஞ் செய்துகாண்பிப்பதற்கு தற்சமயம் நம்மிடத்தில் இருக்கும் சிஷர்களில் ஒருவரும்பக்குவம் உதித்து மோக்ஷானந்தமடைவதற்கு உரித்தானகாலம் வாராதிருப்பதால் இங்கேயிருக்கும் முள்ளிச்செடி நம்முடைய பாதோதகஜலத்தினுல் வளர்ந்து நினைப்படி தவருமல் பதார்த்தத்துக்கு காய்கொடுத்து நிவேத்தியத்துக்கு உபயோகப்பட்டு வருவதாலும் இதற்கு மோக்ஷானந்தகதியும் சமீபித்து விட்டபடியால் இதைத்தான் இவ்விடம்வரும் அரசனுக்கு திருஷ்டாந்தரங் காண்பிக்கவேண்டுமென்று சுவாமிகள் திருவுளங் கொண்டிருக்கும்போது மந்திரி பிரதானி முதலானவர்களோடு அரசன் வந்து சுவாமிகளுக்கு நேரேவந்தனஞ் செய்துநிற்க உடனே சுவாமிகள் வாசலிலேயிராநின்ற பசுமைநிறத்துடன் இலை காய் பூவுகளோடும் நிறைந்திருக்கும் முள்ளிச்செடியைப்பார்த்து அகத்தின்கண்ணே விதிப்படி மந்திராதி திக்ஷைமுதலியவைகளைச் செய்து ஞானநோக்குற்று பார்த்தமாத்திரத்திலுடனே முள்ளிச்செடியின் கண்ணேயிருந்து ஓர் அகண்டாகாரஜோதி உண்டாகி அதில்முள்ளிச்செடி ஐக்கியமாய் அதிலிருந்து ஓர் முனீஸ்வரர் பிரசன்னமாகி ஸ்ரீ அகண்டாகார சின்மயானந்த சொரூபராகிய உமாபதிசிவாசாரிய சுவாமிகளைப்பார்த்துமூன்றுமுறை வலம்வந்து அட்டாங்க நமஸ்கார முதலியவைகளை கிரமப்படி வழிபாடுகள் செய்து சுவாமிகள் சந்நிதானத்தின்கண்ணே நின்றுகொண்டிருக்க, சுவாமிகள் திருநோக்கஞ்செய்து முனீஸ்வரரைப்பார்த்து நீயாரப்பாவென்று வினவ, அதற்கு முனீஸ்வரர்மிகுந்த பயபக்தியோடு சுவாமிகளைப்பார்த்து அடியேன் முன்ஜனனத்தில் மானிடவடிவத்தோடு பொருந்தி காட்டின் கண்ணே தவசுசெய்துக்கொண்டிருக்கும்போது ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்த சின்மயசொரூபியாகிய பரமசிவமே பிராமணத்திருமேனி கொண்டு விபூதிருத்திராக்ஷதாரணங்களோடு எழுந்தருளி நேரே பிரசன்னமாகி நீ எதற்காக அப்பா இங்ஙனம் தவசு செய்துவருகிறுய் என்று கேட்டருள, அடிமை ஒன்று கருதி தவஞ்செய்துவர மற்றொன்றைக்குறித்து வரங்கேட்டருள, அதற்கு சுவாமிகள் அடிமையைப்பார்த்து மனதில்கருதி தவஞ்செய்து வந்தது ஒன்றிருக்க, மற்றொன்றைக்குறித்து வரங்கேட்கிறபடியால் உடனே மறுஜெனனத்தில் முள்ளிச்செடியாகப் போகக்கடவதென்று சபித்துவிட, அப்பொழுது அடியேன் இந்தச்சாபம் எப்பொழுது நிவர்த்தியாகி மோக்ஷானந்தங் கிடைக்கப்படுமென்று கேட்டுக்கொண்டதற்கு சுவாமிகள் எம்மைப்போல் ஓர் மானிடவ

டிவம் அவதரித்து சிவஞான சொரூபராயிருக்கப்பட்ட மகான்களி ருக்கும் ஸ்தானத்தில் முள்ளிச்செடியாகப்பிறந்து அவர்களுடைய பாதோதக ஜலத்தினல் வளர்ந்து தினந்தோறும் அவர்களுக்கு நிவேத்தியத்திற்கு உபயோகப்படும்படியாக காய் கொடுத்துவந்து அவர்களாலேயே நீர் மோக்ஷானந்தம் பெற்றுக் கொள்ளப்படு மென்று திருவாய்மலர்ந்தருளிவிட்டு உடனே மறைந்தருள, அவ் வண்ணம் முள்ளிச்செடியாகப் பிறந்து சுவாமிகளுடைய பாதோதக ஜலத்தைக்கொண்டு வளர்ந்துவந்தது என்று முனீஸ்வரர் சொன்ன வுடனே சுவாமிகள் முனீஸ்வரரை திருநோக்கஞ்செய்து முள்ளிச் செடியிலிருந்து முனீஸ்வரராக அவதரித்தமையால் உமக்கு முள் ளிமா முனீஸ்வரரென்று திருநாமஞ்சூட்டப்பட்டது என்று வாக் களித்து ஞானப்பார்வைசெய்த மாத்திரத்தில் முனீஸ்வரர் அங்கி ருந்தவர் இராமல் அரூபிகரமாய் மறைந்துவிட்டார். அரசர் மந்திரி முதலானவர்கள் கண்டு மிகவும் மனம் திடுக்குற்று அரசர் சரீரமுழு தும் வியர்வையுற்று மெய்ம்மறந்து பின்பு ஒருவாறு தெளிவடை ந்து மிகுந்த அச்சமுண்டாகி இப்போப்பட்ட சாக்ஷாத்கார கடவு ளென்று எமது அஞ்ஞானத்தினல் தெரியாமல் பலவாருக சுவாமி களை வாக்கினல் சொன்னதோடு இவ்விடம் விசாரிக்கும் பொருட் டாக கருதிவந்ததும் பெருங்குற்றத்துக்கு ஆளாகிவிட்டேனே இதற்கு யாது செய்குவேன் என்று மிகுந்த வருத்தத்தோடு ஸ்ரீ உமாபதிசிவாசாரிய சுவாமிகளுக்கு நேரே சென்று மூன்று முறை வலம் வந்து அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்க்காரம் முதலியவைகளை கிரமப்படி பணிந்து சுவாமிகளைப்பார்த்து அரசன் மனதில் மிகுந்த பயபக்தியோடு அடியேனுடைய சிற்றறிவால் இங்ஙனம் கருதி வந்த குற்றமாதிகளை சுவாமிகள் கடாக்ஷித்து பொறுத்தருள வே ண்டுமென்று கேட்டுக்கொள்ள, உமாபதிசிவாசாரிய சுவாமிகள் அரசன் சொன்ன மொழிகளைத் திருவுளம்கொண்டு உலகத்துக்கு அரசன் ராச்சியபரிபாலனஞ் செய்துவந்தால் உலகத்தில் உண்டா கும் சகல நியாயா நியாயங்களையுங் கேட்டு விசாரிக்க வேண்டியது கடமைதான் அப்படியிருக்க, இங்ஙனம் நீர் கருத்து செய்து வந்தது நியாயமே தவிரவேறல்ல என்று, இன்னம் அனேக நெறிகளை நட த்திவரவேண்டு மென்பதாக அரசனுக்கு போதித்து, அரசனை ஆசிர்வதித்து இருப்பிடத்துக்குச் செல்ல சுவாமிகள் ஆஞ்ஞாபித் துவிட, அரசன் சுவாமிகளுக்கு முன்போல் வழிபட்டு விடை பெற்றுக்கொண்டு வெளியே வந்து மோக்ஷானந்தம் பெற்றுவிட்ட

சாம்பானுடைய பெண்சாதியைக் கூப்பிட்டு உன்னுடைய புருஷன் முன் ஜென்மத்தில் செய்திருந்த தபோபலத்தினலோ அல்லது திருப்பணிவிடை செய்துவந்த பக்திமுதிர்ச்சி முன்னிட்டோ சுவாமிகளுக்கு கிருபைநேர்ந்து மோக்ஷானந்தத்தில் ஐக்கியமாய்விடப்பட்டது. ஆதலால் இனி உனக்கு ஜீவனத்திற்குப் பிரதிவழியில்லாமையால் விறகடிவிளாகமென்னும் ஓர் கிராமத்தை உனக்கு சர்வமானியம் இன்று முதல் விடப்பட்டிருக்கிறது ஆகையால் உன்னுடைய ஜீவதிசைவரையில் ஷை கிராமத்தை அனுபவித்துக் கொண்டு வருவதோடு அதில் கிடைக்கும் சகல மாசூலாதிகளையும் உன்னுடைய ஜீவனத்திற்கு போதுமானவைகளை வைத்துக் கொண்டு மிகுதியை நீ நல்லதருமங்களைச் செய்துவர வேண்டியது தவிரவும் உனக்கு மரணகாலம் சமீபத்து விட்டால் முன்னமே ஷை கிராமத்தை உமாபதிசிவாசாரிய சுவாமிகளுடைய ஆதீனத்தில் சேர்ப்பித்துவிட வேண்டியதென்று தீர்மானித்துவிட்டு உமாபதிசிவாசாரிய சுவாமிகளுக்கு அனேக கிராமங்களை சர்வமானியம் செய்து வைத்ததோடு சுவாமிகள் எழுந்தருளியிராநின்ற மடலாயத்தைபும் பழமையாகப் போயிருந்தவைகளை யெல்லாந் திருத்தியும், நூதனமாக சிலதிருப்பணிவிடைகளும் செய்து வைத்தார். அப்பால் ஸ்ரீ சாக்ஷாத்கார சிவஞான சொரூபராகிய உமாபதிசிவாசாரிய சுவாமிகள் அநேகசிஷியர் களுக்கு சாத்திரங்கள் போதித்துக் கொண்டு வரும் போது சிஷர்களிலொருவர் மிகுந்த தாமிதகுணம் பொருந்தினவராய் பாடங்கள் சரி வரசெய்யாமல் தினப்படி சுவாமிகள் பார்த்து வந்து ஓர் தினம் அந்தசிஷரைக் கூப்பிட்டு உமக்குப் பாடங்கள் எவ் விதமாக போதித்து வந்தாலும் மனதில்பதியாமல் அசமந்தகுணபுத்தியுடையவராயிருக்கிறபடியால் இன்றுமுதல் பாடங்கள் செய்து வரும்போது ஒவ்வொரு பாடத்துக்கும் ஓர் குடத்தில் ஒவ்வொரு உளுந்தாகப் போட்டு வந்து அந்தக்குடம் நிரம்பினல் உமக்குப் பாடமும் சரிவர வந்து விடும் என்றும் ஆக்ஞாபித்த மாத்திரத்தில் அந்தப்படி சிஷியர் சுவாமிகளைப்பார்த்து சுவாமிகள் ஆக்ஞாபித்தபடி நடந்துவருகிறேன் என்று மிகுந்தவணக்கத்தோடு சொல்லிவிட்டு ஒவ்வொரு பாடமும் வாசித்து முடிந்தவுடன் குடத்தில் ஒவ்வொரு உளுந்தாகப் போட்டுக்கொண்டு வந்தார் பின்பு குடத்தில் உளுந்தும் நிரம்பிவிட்டது, சிஷியருக்குப்பாடமும் சரிவரவந்து விட்டது. சுவாமிகளுடனே தெரிந்து சிஷியரைக்கூப்பிட்டு பாடங்கள் சரியாய் வந்துவிட்டதா வென்றுகேட்க சிஷியர்

மிருந்தவணக்கத்தோடு பாடம் வந்துவிட்டது என்று மறுவுத்திரஞ் சொல்லவும் சிஷியருக்கு முன்சென்மத்தில் செய்திராநின்ற சிவபுண்ணியமேலீட்டினால் மோக்ஷானந்தகதியும் சமீபித்திருப்பதை ஸ்ரீ சின்மயானந்த சிவஞானசொரூபராகிய உமாபதிசிவாசாரிய சுவாமிகள் ஞான திருஷ்டியில் தோன்ற உடனே சிஷியருக்கு சிவாகமவிதிப்படி ஞான தீக்கைகளைச்செய்து ஞானநோக்குற்று திருப்பார்வைசெய்தவுடனே அங்ஙனம் ஓர் அகண்டாகாரஜோதியுண்டாக சிஷியர் குடத்தில் உளுந்து எண்ணிக்கையின்றி ஆஞ்ஞைப்படி நிரம்பச்செய்தபடியால் அவருக்கு குடவுளுந்தளந்த முனீஸ்வரரென்று காரணப்பெயராகிய திருநாமஞ்சூட்டி, குடவுளுந்தளந்த முனீஸ்வரரே இந்த ஜோதியின்கண்ணே பிரவேசிக்கும்படி சுவாமிகள் உத்திரவுசெய்ய அந்தப்படி முனீஸ்வரர் அந்த ஜோதியின்கண்ணேபுகுந்து இரண்டறக்கலந்து ஐக்கிய மாய்விட்டார்.

இந்தப்படி சுவாமிகள் அற்புதக்காக்ஷிகள் செய்துக்கொண்டு தினப்படி சிவபூசைசெய்துமுடித்து சிவாநுபூதியிலிருந்து வெளியே வருகிறபரியந்தம் உச்சியில் ஓர் கெருடப்பக்ஷி சுற்றிசுற்றிக்கொண்டயிருந்து சுவாமிகள் வெளியேவந்தவுடன் சுவாமிகளைப்பார்த்து தெரிசித்துவிட்டுப்போய்விடுகிறது. இந்தப்படி தினந்தோறும் தவறாமல் நெடுநாளாக கெருடப்பக்ஷி நடந்துவருநாளில் அந்தப்பக்ஷி முன்ஜெனனத்தில் செய்திராநின்ற தபோபலக்குறைவுமுன்னிட்டு பக்ஷியாக அவதரித்து வந்திருக்கிறதென்பதை சுவாமிகள் அகத்து ஞானத்தால்திருவுளங்கொண்டு வழக்கம்போல் ஓர் தினம் சுவாமிகள் சிவபூசை முதலியவைகளை முடித்துவிட்டு வெளியேவர, வாசலுக்குநேராக உச்சியில் கெருடப்பக்ஷி வட்டமிட்டுக்கொண்டிருக்க சுவாமிகள் சிவாகமவிதிப்படி தீக்கையைச்செய்து ஞானதிருஷ்டியால் பக்ஷியைநோக்கி கெருடமாமுனியே வரக்கடவது என்று திருவாய்மலர்ந்தருள உடனே உச்சியின்கண் சுழன்று கொண்டிருந்த கெருடப்பக்ஷி அங்கிருந்துஜோதிசொரூபத்தோடு சேர்ந்து ஐக்கியமாய்விடப்பட்டது.

இந்தப்படி சாக்ஷாத்கார உமாபதிசிவாசாரியசுவாமிகள் நால்வர்களுக்கு மோக்ஷானந்தத்தைக் கொடுத்தருளியபின்பு சிலகாலம் வரையில் மெய்கண்டதேவர் சந்ததிக்கு முதன்மையாக குருமுகூர்த்தமாக எழுந்தருளி அநேகசிஷியர்களுக்கு சித்தாந்தசாத்திர சிரவணாதி முதலியவைகள் போதித்துக்கொண்டு மெய்கண்டதேவர் சந்ததியிலிருந்து நால்வர்கள்விளங்கிவருகிறபடிக்கு தமக்குப்பிறகு

தம்முடையசக்தி விளங்கிவரும்பொருட்டாக சிஷியர்களில்மிகுந்த பக்குவமுதிர்ச்சியுள்ள அருணமச்சிவாயதேசிகருக்கு ஞானசாத்திரங்களாகிய தாம்செய்தருளிய சித்தாந்தசாத்திரங்களில் நெஞ்சுவிடுதூது என்னும் ஞானநூலைப்போதித்துவிட்டு பின்பு சிலகாலஞ்சென்று சுவாமிகள் எழுந்தருளியிராநின்ற கொற்றவன் குடியின்கண்ணே மேஷம் என்னும் சித்திரைமாதம் அஸ்தநக்ஷத்திரத்தில் ஸ்ரீ சிவஞானசொரூபிகளாகிய உமாபதிசிவாசாரியசுவாமிகள்நித்தியானந்த பரவசமாய்விட்டார்கள்.

திருச்சிற்றம்பலம்.

---

உமாபதிசிவாசரியசுவாமிகள் அருளிச்செய்த நூல்கள்.

வடமொழியில் பௌட்காராகமத்துக்கு வியாக்கியானமும், தமிழில் சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, கொடிக்கவி, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம், போற்றிப்பஃறொடை; நெஞ்சுவிடுதூது என்னும் சைவசித்தாந்தசாத்திரங்களெட்டும், கோயிற்புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறைகண்டபுராணம், சேக்கிழார்புராணம் நான்கும்; திருப்பதிக்கோவை, திருப்பதிகக்கோவை என்னும் இரண்டு பிரபந்தங்களுமாம்.

## புராணவரலாறு முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்டதேசிகன் திருவடி வாழ்க.

---

## தாயுமானசுவாமிகள் பாடல்-

குருமரபின் வணக்கம்.

சிற்றம்பலமன் அஞ்சின்மயராந்தில்லைநகர்க்
கொற்றங்குடி முதலைக்கூறநாளெந்நாளோ.
குறைவிலருண் ஞானமுதல்கொற்றங்குடியடிகள்
நறைமலர்த்தாட்கன்புபெற்றுநாமிருப்பதெந்நாளோ.

---

